23rd September 1958]

SRI S. NAGARAJA MONIGAR : இம்மாதிரியான பெருவாரியான மாறுதல்கள் நடந்து வருவதால் இதைப்பற்றி புகார்கள் வருகின்றன. ஆகவே இம்மாதிரியாக அளவு கடந்த முறையில் மாறுதல் நடவாதவாறு எதிர்காலத்தில் சர்க்கார் ஒரு நடைமுறையை கையாளுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது நாம் ஜில்லா போர்டுகளின் முடிவு காலத்தைப்பற்றி ஆலோசித்துக்கொண்டிருக்கிறோம். ஆகவே இதைப்பற்றி பேசவும் விவாதிக்கவேண்டிய அவசியம் இல்லை என்று நினைக்கிறேன்.

SRI S. LAZAR : ஸார், இம்மாதிரி தவறிழைக்கின்றவர்களை மாற்றுவதற்கு பதிலாக தண்டிப்பதற்கு நடவடிக்கை எடுப்பதற்கு ஒரு நடைமுறையை சர்க்கார் கையாளுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சாதாரணமாக ஆசிரியர்கள் பெரிய குற்றம் செய்தால்தான் தண்டிக்க முடியும். சிறிய குற்றங்களுக்கு எல்லாம் தண்டிக்க முடியாது. இம்மாதிரி இடமாற்றுவதே போதுமான தண்டனையாக ஆகிவிடுகிறது. ஆனால் நாம் இப்போது டிஸ்ட்ரிக்ட் போர்டையே மாற்றுவதற்கு ஆலோசித்துக்கொண்டிருக்கிறோம். ஆகவே இதைப்பற்றி கூடுதலாக கவனிக்கவேண்டிய அவசியமில்லை.

SRI N. R. THIAGARAJAN : இப்போது அனுவசியமாக இடமாற்றம் செய்ததை மாற்றி பழைய இடத்திற்கே திரும்பி மாற்றிக் கொடுப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்படி செய்தால் இன்னும் ஒரு தடவை உபத்திரவம் கொடுப்பது போலாகும். ஆகவே இதைப்பற்றி அவசியம் என்றிருக்குமானால் அங்கங்கு இருக்கக்கூடிய ஸ்பெஷல் ஆபீஸர்கள் மாற்றம் செய்வார்கள் என்று நம்புகிறேன்.

### *Medical Colleges*

* 434 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்ய வைத்தியக் கல்லூரிகளில் சென்ற பத்தாண்டுகளில் இன்டர்மீடியட்டில் 3-வது வகுப்பில் தேரிய மாணவர்கள் எத்தனை பேர் வைத்தியப்படிப்புக்கு அனுமதிக்கப்பட்டார்கள் ?

(ஆ) அதில் எத்தனை பேர் பத்தாண்டுகளுக்கு மேலாக வைத்தியக் கல்லூரிகளில் படித்துக்கொண்டு இருக்கிறார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) As the selections were made on the basis of the marks obtained by the candidates in Part III Optionals of the Intermediate Examination without reference to the classes obtained in the examination, the information is not available.

SRI N. R. THIAGARAJAN : ஸார், எனக்கு தெரிந்த அளவில் எங்கள் ஊர்வாசிகளில் சிலர் 10, 12, 16 வருடங்கள் கூட இந்த வைத்தியக் கல்லூரியில் தொடர்ந்து படித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஏதேனும் ஒரு நிவர்த்தி மார்க்கம் செய்து கொடுக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இவ்வளவு நாட்களாக அங்கே படித்துக்கொண்டிருப்பது, ஒருவேளை பாண்டிய நாட்டின் பண்போ என்னவோ தெரியவில்லை. (சிரிப்பு.)

SRI K. VINAYAKAM : Are not students admitted to the medical college, if they have secured the minimum marks necessary for admission? Is it a crime to get a third-class and go into the medical college, if the boy deserves admission on the basis of the marks in his optionals?

MR. SPEAKER : How does it arise out of the main question? The Government say they have no information. Anyway, I leave it to the Hon. Minister to answer, if he is willing.

SRI K. VINAYAKAM : Do not the Government fix the minimum marks to be obtained by the students to become eligible for admission, and if such marks are obtained, even though they secure only a third-class, are they not eligible to get into the medical college?

THE HON. SRI M. A. MANICKAVELU : They are quite eligible. The minimum fixed is in respect of the optionals. It must be 45 per cent.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : தலைவர் அவர்களே, ஒன்றிரண்டு பேர் இவ்விதம் வைத்திய கல்லூரியில் வருஷக் கணக்கில் படித்துக்கொண்டிருக்கிறார்கள் என்ற காரணத்திற்காக, பாண்டிய நாட்டு மக்களின் பண்பே இந்த முறையில்தான் இருக்குமா என்று சந்தேகப்படும்படியாக அமைச்சர் அவர்கள் கூறினார்கள். அந்த முறையில் பாண்டிய நாட்டு மக்களின் பண்பு இல்லை என்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: இந்த கேள்வியின் பதில் அவருக்குரியதாகும்.

SRI A. A. RASHEED : Is it not a fact that the more the number of years a medical student spends in the hospital and the college, the better and more efficient a doctor he later on emerbes? (Laughter.)

THE HON. SRI M. A. MANICKAVELU : That reminds me of a saying by some one that the longer the period a student fails from the infant class onwards—two years or three years in each class—the deeper is the foundation laid. (Laughter.)

### *Drinking water*

* 435 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) மதுரை நகர் மேலக்கால் குடிதண்ணீர் திட்டம் எப்பொழுது நிறைவேற்றப்படும் ?

(ஆ) அதற்கு எவ்வளவு செலவாகும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The first and second stages of the Madurai Melakkal water-supply improvement schemes are expected to be completed by the end of 1960. The third and fourth stages of the scheme may be completed by the end of 1966.

(*b*) The approximate total cost of the schemes works out to Rupees one hundred and thirty-one lakhs.